# அமுது அடியடைந்த அன்பர்




ஆசிரியர்:—
யர்திருவாளர் அ.மு.சரவணமுதலியார்.

மணிவாசக மன்ற வெளியீடு க

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# அழுது அடியடைந்த அன்பர்

(ஓர் ஆராய்ச்சி நூல்)

ஓய்வு பெற்ற தமிழாசிரியர்
திருசிரபுரம்
பெருஞ் சொல் விளக்கனார்
முதுபெரும்புலவர்
உயர்திருவாளர் அ. மு. சரவண முதலியார் அவர்கள்
எழுதியது.

மணிவாசக மன்றம்
அரியலூர்

துன்முகி மார்கழி
1956



இதன் விலை
ரூபாய் 1—8—0.



அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும்
குனிப்புடையான்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

க. திருவடி நிலையும் வீசுஞ் செய்யகா லுஞ்சி லம்பு
முருவள ரொளியும் வாய்ந்த வூருவு முடுத்த தோலும்
மரைதரு புரிவுங் கச்சி னணிகளு மழகா ருந்தி
மருவிய வுதர பந்தக் கோப்புநூல் வாய்ப்பு மாரும்.

உ. வீசிய செய்ய கையும் விடதாக் காங்க வித்த
தேசும் வண் டுடியு மங்கிச் செறிவுமுன் றிரண்ட தோளு
காசை கொண் மிடறுந் தோடார் காதும்வெண் குழையுங்காண
மாசிலா மணிவாய் விட்டு வழங்கிடா நகைம யக்கும்.

ந. ஓங்கிய கமலச் செவ்வி யொளிமுக மலருங் கண்கள்
பூங்குழ லுமையை நோக்கும் புரணமும் புருவப் பொற்பும்
பாங்கமர் நுதலும் பின்றாழ் படர்சடைப் பரப்பும் பாம்பு
நீங்கருந் தாரு நீரு நிலவுமே னிலவு நீறும்.

ச. கடிமல ரணைய வாரிக் காரிரு ளளகஞ் சேர்த்த
முடியுநன் னுதலும் பொட்டு முயங்கிரு புருவ வில்லும்
வடிகொள்வேல் விழியுங் காதும் வளர்குமிழ்மலருந் தொண்டைப்
படிவவா யிதழு முத்த நகையுமெய்ப் பசுமை வாய்ப்பும்.

ரு. பூங்கமு கமர்க ழுத்திற் பொலிந்தமங் கலநாண் பொற்பும்
பாங்கம ரமையார் தோளும் பங்கையச் செங்கை தாங்கு
மோங்கு செங்கழுநீர்ச் செவ்வி யொளிதரு மலருந் தாருங்
கோங்கரும் பவைப ழித்த கொங்கையுங் குலவு பூணும்.

சா. துடியம ரிடையும் பாந்தட் டொகுபணந் தகுநி தம்ப
வுடையமர் துகிலு மல்க வொல்கிய நிலையுஞ் செய்ய
வடிமலர் மிசைய ணிந்த வாடகப் பாட கக்கீழ்
விடுசுடர்ச் சிலம்பும் வாய்ந்த மெல்லியல் வியந்து காண

'தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி'

---

உ

சிவமயம்,

திருச்சிற்றம்பலம்.

1 பூங்கமலத் தயனுமலர் புண்டரிகக் கண்ணனுந்
தாங்குபல புவனமுமேற் சகலமுமா யகலாத
வோங்குமொளி வெளியேநின் றுலகுதொழ நடமாடுந்
தேங்கமழும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம் பலம்போற்றி.

2 ஆரணங்கள் முடிந்தபதத் தானந்த வொளியுலகிற்
காரணங்கற் பனைகடந்த கருணைதிரு வுருவாகிப்
பேரணங்கி னுடனாடும் பெரும்பற்றப் புலியூர்சேர்
சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம் பலம்போற்றி.

3 தற்பரமாய்ப் பரபதமாய்த் தாவிலநு பூதியதா
யற்புதமா யாரமுதா யானந்த நிலையவொளிப்
பொற்பினதாய்ப் பிறிவிலதாய்ப் பொருளாகி யருளாகுஞ்
சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம் பலம்போற்றி.

4 ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

5 சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
வேராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி.



உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# மணிவாசகங்கள்.

---

1. கடையவ னேனேக் கருணையி னுற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேஙகையின்
[தோல்
உடையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
சடையவனே தளர்ந்தேன்எம்பி ரான்என்னேத் தாங்கிக்
கோள்ளே

2. *உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானுல் அடியேன்உன், அடியார் நடுவுள்இருக்கும் அருளேப்புரியாய்* போன்னம் பலத்தேம் முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

3. கோவே யருள வேண்டாவோ கோடியேன் கேடவே அமையுமே, ஆவா வேன்று விடிலேன்னே அஞ்சேல் என்பார் ஆரோதான், சாவா ரேல்லாம் என்னளவோ தக்க வாறன் றேன்றுரோ, தேவே தில்லே நடமாடி திகைத்தேன் இனித்தான் தேற்றுயே.

4. வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ, வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னேப் பணிகோண்டாய். வேண்டி நீயா தருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால். வேண்டும் பரிசோன் றுண்டேன்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே.

5. வானுகி மண்ணுகி வளியாகி ஒளியாகி
ஊனுகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனுகி யானெனதேன் றவரவரைக் கூத்தாட்டு
வானுகி நின்றுயை யேன்சோல்லி வாழ்த்துவனே.

---

*(மாணிக்கவாசகர்)*

உ

# பொருள் அடக்கம்.







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவாதவூரர் திருத்தாட்டுணை.

# நன்றி உரை.

—[]—

பூமேவு சதுர்முகனும் திருமாலும் போற்றிசெயத்
தேமேவு குழலுமையாள் செழுங்குவளை விழிகளிப்ப
மாமேவும் இதழிநறு மறைதளிப்ப மணிமன்றம்
தாமேவி நடம்புரியும் தனிப்பொருளை வணங்குவாம்
(பிரமோத்திர காண்டம்)

அருவாய் உருவாய் அருவுருவாய் அமைந்த திருச்சிற்றம்பலமாகிய மணிமன்றம்ஆடும் அவிர் சடைக் கடவுளார் அருளால் ஆக்கவும், அளிக்கவும், அழிக்கவும், மறைக்கவும் அருளவும் படுகின்ற, உலகிலுள்ள பிறவிகளுள், மக்கட் பிறவியே பெறுதற்கரியதும், பெருமைக்குரியதும் ஆகும் என்பது யாவரும் ஒப்ப முடிந்த ஒன்று. காரணம், அது வீடடைதற்குப் பெருந்துணையாகவும், தொகுத்து நினைக்கும் மனம் உடையதாதலோடு, பகுத்து அறியும் அறிவும் உடையதாகவும் இருப்பது' என்பது. மக்களுடைய உள்ளத்தினைத் தெள்ளியதாக்கி, உணர்வினை உயர்விப்பது, 'கேடில் விழுச்செல்வம்' என்றும், 'செல்வத்துட்டலைச் செல்வம்' என்றும் சிறப்பிக்கப்படும் கல்வியும், கேள்வியுமேயாகும். ஒவ்வொருவரையும் நன்மனமும், அறிவுத்திறனும் அடையவும் அதனல், தீய, கூடா ஒழுகலாறுகளையன்றித் தூய ஒழுக்கங்களையே உடையவராகவும் செய்து, வீட்டுநெறியிற் கூட்டுவிக்கவல்லது, நல்லாசிரியரை அடுத்துப் பல்காற் கற்றும் கேட்டும் பயிலும் பயிற்சியல்லது வேறு யாது உள்ளது?

ஏழையேங்களுக்கு உயர்திருவாளர், 'பெருஞ்சொல் விளக்கனர்' முதுபெரும்புலவர்' அ. மு. சரவணமுதலியார் அவர்களிடம் பயிலும் பெறற்கரும்பேறு கிடைத்தது அவர்கள்

ஆசிரியப் பெருந்தகையாராக அமர்ந்து தமிழ் அமிழ்தத்தை—அமிழ்தத்தமிழை—தமிழ்ச்சிவத்தை – சிவத்தமிழை எல்லா வகையாலும் சீரும், சிறப்பும், செம்மையும் பொருந்தப் போதித்தருளினார்கள். அதன்பயனாகத் தமிழ்மொழியின் பாலும், சைவசமயத்தின்பாலும் உளம் நிறைந்த அளவிறந்த பெருங்காதல் உடையவர்கள் ஆயினோம். அக்காதல் ஏழையேங்களை, அவர்களுடைய, தக்கவர்களாகிய ஏனையோர்களுடைய சொற்பொழிவுகள் எங்கெங்கு நடைபெறினும் அங்கங்கெல்லாம் இயன்ற அளவால் முயன்று சென்று கேட்குமாறு தூண்டியது. பாடசாலையிலும், பின்னரும் இருந்த, சென்ற சமயங்களிலெல்லாம், இடங்களிலெல்லாம் சாதாரணமாக உரையாடும்போதும் அவர்கள், இலக்கண, இலக்கிய, தோத்திர, சாத்திர சம்பந்தமான உயர்ந்த கருத்துக்களை வாரிவழங்குவார்கள் அவைகள் கேட்ட அளவானே ஏழையேங்களுடைய உள்ளத்தினை உருக்குவனவாகவும், ஊக்கும் ஆக்கமும், உய்விக்கும் மெய்ந்தன்மையும், துன்பறுத்தின் புறுத்து மன்பும், அருளும் உடையனவாகவும், பிறவிப் பிணிக்கு ஓர் மருந்தாம் பெருந்தன்மை பொருந்தியனவாகவும் இருக்கும் என்பது ஏழையேங்கள் அறிந்தறிந்து, உணர்ந்துணர்ந்து அனுபவித்த உண்மையாகும்.

இவ்வாறாகப் பயிற்றுவித்த, கேட்பித்த அவர்களுடைய போதனையினாலேயே சிறிய தமிழ்ச் சைவர்களாக ஆக்கப் பெற்ற சிறியேங்களால் திருவருட்டுணைகொண்டு பெரியோர்கள் மூலம் தமிழைப் பேணவும், சிவத்தைக்காணவும் உதவுவதாகச் சித்திரபானு ஆண்டு மார்கழித்திங்கள் சா'ம் நாள் (21—12—1942) சோமவாரம் உரோகணி விண்மீனில் மகா ஓரையில் **மணிவாசக மன்றம்** அமைக்கப்பட்டது.

இறைவன் தாமே தம்முதற்குருவாய் எழுந்தருளித் தவத்தினில் உணர்த்த உணர்ந்து, சீவபோதம் போயகன்று சிவபோதம் வந்தருளுதலும் சைவத் திருமந்திரமாகிய திருவைந்தெழுத்தையே முதலாகக்கொண்டு பாடப்பட்டதும், தொல்லை யிரும்பிறவிச் சூழும்தளை நீக்குவதும், அல்லல் அறுப்பதும், ஆனந்தமாக்குவதும், எல்லை மருவா நெறியளிப்பதும், அட்டமூர்த்தமாகிய பரம்பொருளாம் அரும்

பொருளையே பெரும் பொருளாகக் கொண்டதும், எட்டாந் திருமுறையும் ஆகிய திருவாசகம் என்னும் தேனினைச் சொரிந்தருளியவர்களும்; சிவபெருமான், வானுலகின்னீங்கி இம்மண்ணுலகினுக்குத் தாமே அருட்டிரு மேனிகொண்டு எழுந்தருளிவந்து, குருந்தமரநீழல் இருந்து ஆண்டு கொண்டருளவும், நரிகளைப் பரிகளாக்கிப் பைமையோடணைறித் தாமே குதிரைக்காரராகவும் வந்தருளவும், கூலிஆளாகிப் பிட்டுண்டும், மண்சுமந்தும பிரம்படியும் பட்டருளவும், தாமே அழகிய சிற்றம்பலமுடையாரெனும் எழுதுவோராகிவந்து திருவாசகத்தை எழுதி அருளவும், 'பாவை பாடிய வாயால் கோவையும் பாடுக' என்றருள் செய்யவும் பின்னர் 'கோலமார் தரு பொதுவினில் வருக' எனத் திருவாய் மலர்ந்தருளவும், பெறுமாறு அருந்தவம் செய்து பெரும்பேறு பெற்றவர்களும் ஆகிய மாணிக்கவாசக அடிகள் திருப்பெயரான் அமைந்த மன்றத்தின் திறப்புவிழாவினை அடுத்தே வந்த சுபானு ஆண்டு ஆனித்திங்கள் உக, உ௨ம் நாட்கள் (5 6—7—1943) திங்கள் செவ்வாய் (மணிவாசகர் மகத் திரு நக்ஷத்திரம் கூடிய) கிழமைகளில் கொண்டாடுவதென முடிவு செய்துகொண்டு ஏழையேங்களுடைய ஆசிரியர் அவர்களைத் தலைமைதாங்கியும், மன்றத்தினைத் திறந்து வைத்தும், 'அழுது அடி அடைந்த அன்பர்' என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றியும், திறப்புவிழாவினைச் சிறப்புற நடத்தித்தந்தருளுமாறு வேண்டிக்கொண்டோம். எண்ணிய ஏழையேங்கள், எண்ணியவாறு, ஏழையேங்களுக்கு அருளும் தெய்வமாக அன்றும், இன்றும், என்றும் விளங்கியவர்களும், விளங்குகின்றவர்களும், விளங்குபவர்களும், ஆகிய ஏழையேங்களுடைய குருதேவராகிய அவர்கள், "அவ்வாறே அனைத்தும் செய்வோம்" என்று அருள் செய்தார்கள். ஏழையேங்களுடைய வேண்டுகோளின் படியே ஆசிரியர், 'வித்துவான்' உயர்திருவாளர். க. முருகேச முதலியார் (தலைமைத்தமிழாசிரியர், மாநாட்டாண்மை உயர்தரப்பள்ளி, அரியலூர்) அவர்களும் பிற எல்லா ஏற்பாடுகளையும் செய்தும், செய்வித்தும் அருள்செய்தார்கள். இருபேராசிரியர்களும் ஒருங்கே இருந்து நடத்த, விழா இனிதே நடைபெற்றது. பட்டற்ற மகிழ்ச்சி அடைந்தோம். ஐயா அவர்கள் மணிவாசகப் பெருமானுடைய வரலாற்றினை மிக விரிவாகப் பலமேற்கோள்களுடன் ஆராய்ந்து எல்லா வகையாலும்

எல்லோரும் போற்றுமாறு சொன்மழை பொழிந்தார்கள் வானோரும் போற்றினரென விண்மாரியும் பெய்தது. அனை வருடைய உடலும், உள்ளமும், உயிரும் குளிர்ந்தன. அன்று முதல், அவ்விருவரும் முறையே நிரந்தரமாகத் தலைவராக வும், துணைத்தலைவராகவும் இருந்துபுரந்துவர மன்றம் நடந்து வருகின்றது.

இத்தகு தன்மையால் 'அழுதடி யடைந்த அன்பர்' சொற்பொழிவினை முதன் முறையாகவும், பின் மேற்கண்ட மன்ற பதினோராம்ஆண்டு நிறைவுவிழாவில் (17-10-1954ம் தேதி இரண்டாம் முறையாகவும், மீட்டும் திருசிரபுரம் அருணெறித் திருக்கூட்ட இரண்டாவது திருவாசக விழா வில் (12—6—1955ம் தேதி) மூன்றாம் முறையாகவும் கேட்ட ஏழையேங்களுக்கு, அது மும்முறையும் வெவ்வேறு தன்மையினதாயமைந்து அருங்கருத்துக்களைப் பெருமுயற்சி யினாற் காய்தல், உவத்தலின்றி, ஆய்ந்தாய்ந்து, நடுநின்று புறச் சான்றுகளினால் அரண் செய்தும், எவரும் மறான் படா வகையில் அகச்சான்றுகளினால் மிகச்சீரிய நேரிய முறையில் நிலை நிறுத்தியும் செல்லும் தன்மையினாலும், பிற வற்றாலும், பெரிதும் பாராட்டத்தக்க அருமைகள் நிறைந்திருந்தமை யினால், முதன்முறை முதலே ஏழையேங்களுடைய உள்ளத்தே தோன்றியிருந்த மணிவாசகருடைய வரலாற்றினை, 'அழு தடியடைந்த அன்பர்' என்ற தலைப்பில் நூல்வடிவில் மன்ற வெளியீடாக வெளியிடவேண்டும் என்ற பேரவா, மேலும், மேலும், பெருகிப் பெருகி, முறுகி வளர்ந்து வருவதாயிற்று. ஆராத பேரவாவாகிய அவ்வெண்ணத்தினைச் சமயம் வாய்க் கும் சமயங்களிலெல்லாம் அவர்கள்பால் விண்ணப்பித்துக் கொண்டே இருந்தோம். அவர்கள் திருவுளமிரங்கித் தாம், 1930-ம் ஆண்டில் இத்தலைப்பில் ஓர் ஆராய்ச்சி நூல் எழுதிவைத்திருந்ததாகவும் மன்றத்தில் வெளியிடுமாறு அதனைப்பார்த்துத் தேடி எடுத்துத் தருவதாகவும் அறிவித் தருளினார்கள். அவ்வாறே அவர்கள்பாற் பெற்று இந்நூல் வெளியிடப்பட்டது.

ஏழையேங்களுடைய விண்ணப்பங்களை யெல்லாம் ஏற்றருளி விண்ணப்பித்தவாறெல்லாம் செய்துகொள்ள அனுமதி யளித்தருளியவர்களும், ஏழையேங்களுடைய தந்தையும், தாயும், சார்கதியும், அந்தமிலா இன்பமும்,

உயிரும், சாணும், அருட்கோனும். ஆகியவர்களுமாக விளங்கும் ஐயா அவர்கட்கு ஏழையேங்களுடைய நன்றியையும். வணக்கங்களையும். கடமைப்பாடுகளையும் தெரிவித்துக் கொண்டு. அவர்கள் ஏழையேங்களை வேருய், உடனுய், ஒன்றாய் இருந்து காத்தருளி வருகின்றமைக்கு ஏதுவாக, ஏழையேங்கள்பால் வைத்த, ஏழையேங்களுக்கே உரியனவான அவர்களுடைய பேரன்பினை--பெருங்கருணையினை--பேராதரத்தினை, நினைந்து. நினைந்து நெகிழ்ந்து. நெகிழ்ந்து உருகுவதனுக்கு அடையாளமாக இந்நூலை மணிவாசக மன்றசார்பில் அச்சிட்டு, ஆவுடையார்கோவிலில் கோவில் கொண்டருளியுள்ள குருந்தமேவிய பெருந்துறையாரை, அவர்கள் மேலும் உடல் நலமுதலா அனைத்து நலங்களும் பெற அருள்செய்யுமாறு பிரார்த்தித்து, அவர்களுடைய அடிப்போதுகளிலே சமர்ப்பித்துக் கொள்கின்றோம்.

முன்னைத்தவம் சிறிதும் இல்லாத ஏழையேங்களையும் இதுபோன்ற நற்செயல்களில் ஈடுபடுத்தும் ஸ்ரீ சிவகாமி அம்மையார் பாகத்து ஸ்ரீசித்சபாநாயகப் பெருமானுடைய இன்னருளை வணங்கி, அவ்வின்னருள் பெறும் நன்னெறியின் கண் ஏழையேங்களை உண்ணின்றும், புறத்திருந்தும் செலுத்தி வருகின்ற அவ்வம்மையப்பருடைய, மாணிக்க வாசக அடிகளுடைய, எங்கள் ஆசிரியர் அவர்களுடைய பொன்னார் திருவடிகளையும் சென்னிமிசைக்கொண்டு போற்றி வணங்குகின்றோம்.

**கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க !**

மணிவாசக மன்றம்
அரியலூர்.
19—12—1956

மாணவச் சிறுவர்கள்.



உயிரும், சானும், அருட்கோனும், ஆகியவர்களுமாக விளங்கும் ஐயா அவர்கட்கு ஏழையேங்களுடைய நன்றியையும், வணக்கங்களையும், கடமைப்பாடுகளையும் தெரிவித்துக் கொண்டு, அவர்கள் ஏழையேங்களை வேருய், உடனுய், ஒன்ருய் இருந்து காத்தருளி வருகின்றமைக்கு ஏதுவாக, ஏழையேங்கள்பால் வைத்த, ஏழையேங்களுக்கே உரியனவான அவர்களுடைய பேரன்பினை—பெருங்கருணையினை—பேராதரத்தினை, நினைந்து, நினைந்து நெகிழ்ந்து, நெகிழ்ந்து உருகுவதனுக்கு அடையாளமாக இந்நூலை மணிவாசக மன்றசார்பில் அச்சிட்டு, ஆவுடையார்கோவிலில் கோவில் கொண்டருளியுள்ள குருந்தமேவிய பெருந்துறையாரை, அவர்கள் மேலும் உடல் நலமுதலா அனைத்து நலங்களும் பெற அருள்செய்யுமாறு பிரார்த்தித்து, அவர்களுடைய அடிப்போதுகளிலே சமர்ப்பித்துக் கொள்கின்ருேம்.

முன்னைத்தவம் சிறிதும் இல்லாத ஏழையேங்களையும் இதுபோன்ற நற்செயல்களில் ஈடுபடுத்தும் ஸ்ரீ சிவகாமி அம்மையார் பாகத்து ஸ்ரீசித்சபாநாயகப் பெருமானுடைய இன்னருளை வணங்கி, அவ்வின்னருள் பெறும் நன்னெறியின்கண் ஏழையேங்களை உண்ணின்றும், புறத்திருந்தும் செலுத்தி வருகின்ற அவ்வம்மையப்பருடைய, மாணிக்கவாசக அடிகளுடைய, எங்கள் ஆசிரியர் அவர்களுடைய பொன்னுர் திருவடிகளையும் சென்னிமிசைக்கொண்டு போற்றி வணங்குகின்ருேம்.

கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க !

| | |
|---|---|
| மணிவாசக மன்றம்<br>அரியலூர்.<br>19—12—1956 | மாணவச் சிறுவர்கள். |



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



மாணிக்கவாசகப் பெருமான்

திருப்பெருந்துறையிலுள்ள மூலப்படிமம்

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருவாசகத் திருவாசகங்கள்.

1 வாழ்கின்ருய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்ருய் ஆழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்ருய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்ருய் நீஅவலக் கடலாய வெள்ளத்தே.

2 ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை என்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறல றிலைசெய்வதொன்றறியேனே.

3 சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ் சிறுகுடி லிதுசிதையக்
கூவாய் கோவே கூத்தா காத்தாட் கொள்ளுங் குருமணியே
தேவா தேவர்க் கரியானே சிவனே சிறிதென் முகநோக்கி
ஆவா என்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே.

4 கெடுவேன் கெடுமா கெடுகின்றேன் கேடி லாதாய் பழி
கொண்டாய், படுவேன் படுவ தெல்லாம்நான் பட்டாற் பின்
னைப் பயனென்னே, கொடுமா நரகத் தழுந்தாமே காத்தாட்
கொள்ளுங் குருமணியே, நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றே எங்கள் நாயகமே.

5 தவமே புரிந்திலன் தண்மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை யேன்உனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி லேன்நின் திருவடிக்காம்
பவமே யருளுகண் டாய்அடி யேற்கெம் பரம்பரனே.

6 வருந்துவன்நின் மலர்ப்பாத மவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன்நாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தாய் அருளமுதம் புரியாயேல்
வருந்துவனற் றமியேன்மற் றென்னேநான் ஆமாறே,

7 ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலே புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின்திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

8 விச்சுக் கேடுபோய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானு ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றே னாரூரெம்
பிச்சைத் தேவா என்னுன் செய்கேன் பேசாயே.

9 அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப் பணிகேனே.

10 யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனல் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே.

11 தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரருள் என்கொலென்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை உத்தர கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடச் சம்வினை யேனை இருதலையே.

12 மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறும்மட் டேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே.

13 என்னைஅப்பாஅஞ்சல் என்பவர்இன்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
அன்னையொப்பாய்எனக்கத்தனொப்பாய்என் அரும்பொருளே.

14 பெற்றது கொண்டுபிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்தன்னைத் தாங்குநர் இல்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின் றேனெனக் குள்ளவனே.

15 புலன்கள்திகைப்பிக்க யானுந்திகைத்திங் கொர்பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனைவிடுதிகண் டாய்விண்ணும் மண்ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய் தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை யாயென் தொழுகுலமே.

16 தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணை யேஎன்தன்வாழ் முதலேஎனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணையேனும் பொறேனது ய ராக்கையின்திண்வலையே.

17 வெறுப்பனவே செய்யும்என் சிறுமையைநின் பெருமையினாற்
பொறுப்பவனே அராப்பூண் பவனேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவனே நின் திருவரு ளால்என் பிறவியைவேர்
அறுப்பவனே உடையாய் அடியேன்உன் அடைக்கலமே.

18 ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணல்போல் நெக்குநெக்
குள்ளே உருகி ஓலமிட்டுப்
போற்றி நிற்ப தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

19 பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே.

20 பரிதிவாழ் ஒளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே.

21 பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவ சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே.

22 மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகஎன் தனைநூக்கி உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனால் அடியேன் அறியாமை அறிந்து நீயே அருள்செய்து
கோனேகூவிக் கொள்ளுநாள் என்றென் றுன்னைக்கூறுவதே.

23 சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதி பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேன்நான்
உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே.

(திருவாதவூரர்)

———



" பெருஞ்சொல் விளக்கனர் "

" முது பெரும் புலவர் "

திருவாளர் அ. மு. சரவண முதலியார்.

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரை.

இறைவன் திருவருளால் வெளி வருகின்ற 'அழுதடி யடைந்த அன்பர்' என்னும் ஆராய்ச்சி நூலாகிய இஃது 1930ம் ஆண்டு எழுதப்பெற்று என் பெட்டியுள்ளே இருந்த தென்றும், அரியலூர் 'மணிவாசக மன்றத்'தாரால் இப் போதுதான் அச்சாகி வருகிறதென்றும் என் 'கட்டுரைப் பொழில்' என்னும் நூலின் முன்னுரையிற் குறிப்பிட்டிருக் கின்றேன். 1932ம் ஆண்டு எழுதிய 'இரு பெருமக்கள்' என்னும் நூலும் என் பெட்டியுள்ளே இன்னும் தூங்குகிற தென்றும் அதற்குக் காரணமும் பிறவும் அந்த முன்னுரை யிற் குறிப்பிட்டிருக்கின்றேன். திருவருள் கூட்டுங்கால் அந்த நூலும் வெளிவரலாம்.

'அழுதடியடைந்த அன்பர்' என்ற தலைப்பிலும், இந்நூலுட் காணப்படும் உட்பிரிவுகளாகிய 'மணிவாசகரும் கண்ணப்பரும்', 'திருவாசகமும் பரஞ்சோதி முனிவரும்' என்பன போன்ற தலைப்புக்களிலும் பல சபைகளில் 30 ஆண்டுகட்கு முன்னிருந்தே யான் சொற்பொழிவாற்றிய துண்டு. அவ்வச்சபைகளிலே தலைமைவகித்த பேரறிஞர் களும், சொற்பொழிவைக்கேட்ட அறிஞர்பெருமக்களும், 'இக்கருத்துக்களை எழுதி நூல்வடிவமாக வெளியிட்டால் படித்த—படிக்கும் மக்களுக்கு உதவியாக இருக்கும்' என்று கூறினார்கள். அப்பெரியோர்களின் விருப்பப்படிதான் 1930ம் ஆண்டிலேயே இந்த நூலை எழுதிவைத்திருந்தேன். திருவருளால் இப்போதுதான் வெளிவருகின்றது,

இந்நூலின் கண்ணும் காணப்படுகின்ற குறைபாடுகளும் சில உண்டு. முதலாவது எளியநடையில்லை; கடினமான நடை என்பது. ஓரளவில் அஃது உண்மைதான். அதற்குக்காரணம், இஃது எழுதப்பட்ட காலமாகிய 1930ம் ஆண்டிலிருந்த மொழி நடையும் அக்காலத்திற் 'சிவஞான பாடியம்' முதலிய நூல்களில் என் உள்ளம் அழுந்திப் பயின்று வந்ததுமேயாகும்.

இனி 'எளியநடை' என்ற சொல்லும் அரசியற் செல்வாக்குள்ள சிலரால் விபரீத வியாக்கியானம் செய்யப்படுகின்றது. உதாரணமாக, 'கடற்கரை' என்று எழுதுவது தவறு; 'கடல்க்கரை' என்றுதான் எழுதவேண்டுமென்பது. முன்னரே படிப்படியாக மறைந்து வருகின்ற தமிழிலக்கணத்தைக் குழிதோண்டிப் புதைப்பதற்கு இதனினும்வேறு உபாயம் வேண்டாம் அன்றோ! அவ்விலக்கணத்தின் அடிப்படைத் தத்துவத்தை அறிந்தவர்கள் உள்ளங் கொதிக்காமலிருக்குமா? இன்னும், ஆங்கிலத்தோடு தமிழும் பல ஆண்டுகள் பயின்று பெரிய பட்டம் பெற்றவர்களும் இந்த வலை (எளியநடை)யிற் சிக்கியிருப்பதை, அவர்கள் 'ஆடல் கலை' என்றும், 'பாடல்கலை' என்றும் எழுதியிருப்பது காட்டுகின்றது. அச்சொற்கள் ஆடலாகிய கலை, பாடலாகிய கலை என்ற பொருள்களை உணர்த்துகின்ற 'ஆடற்கலை' 'பாடற்கலை' என்பன. அவற்றை மேற்கண்டவாறு எழுதினால் அப்பொருள்களைத் தாராததுமட்டுமல்ல; 'வானழ பழம்' 'கீரைகறி, என்பதுபோன்ற ஒலிக் கேட்டினையும் கொள்ளுதல் ஊன்றி நோக்குவோர்க்குப் புலனாகாது போகாது. இத்துணைக்கேட்டிற்கும் மூல காரணம் 'எளியநடை'ப் பிரசாரமேயாகும். இக்கேடுகள் மலிந்து காணப்படும் இக்காலத்திற்குத் 'தமிழ் மறுமலர்ச்சிக் காலம்' என்று

பெயர் கூறப்படுகின்றது. 'மறு' என்ற சொல் 'குற்றம்' என்றபொருளையும் தருமல்லவா! எனவே 'தமிழ்மொழியிலே குற்றங்கள் மலருகின்ற காலம்' என்று கருதினுல் அதிலே குற்றமில்லையல்லவா? இதிலிருந்து எளியநடை என்பதை அறவே வெறுப்பவன் யான் என்று யாரும் தவருகக் கருதி விடலாகாது. மக்களின் கல்வித்தாம் குறைந்து வருகின்ற காலத்தில் அவர்களுக்கு விளங்கும்படி எளிய நடையில் எழுத வேண்டியதுதான். அதற்காக மேலே காட்டியதுபோன்ற இலக்கணக் கொலை, ஒலிக்கேடு முதலியவற்றைப் பயன் படுத்தலாகாது என்பது எளியேனுடைய உள்ளக்கிடை. உள்ளக்கொதிப்பால் இதுபற்றிச் சிறிது விரித்து எழுத நேர்ந்தது. அறிஞர்கள் பொறுப்பார்களாக.

இனி இரண்டாவது இந்த நூல் 132-வது பக்கத்தில், 'இதனை நோக்குழி, 1914-ம் ஆண்டு தொடங்கி 1918-ம் ஆண்டு வரை நடந்த ஐரோப்பிய மகாயுத்தமும் இதற்கிணையாகா தென்னலாம்' என்று எழுதப் பெற்றிருக்கும் பகுதியைப் படிக்கும் அன்பர்கள் 'அதன் பின்னர் 1939ல் தொடங்கி நடந்த பெரும்போர் குறிக்கப்பட வில்லையே! காரணம் என்ன?' என்று சிந்திக்கலாம். அதற்கும் காரணம் இஃது 1930 லேயே எழுதப்பட்டதுதான் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

மூன்ருவது நூலுள் எழுத்துப் பிழைகள் முதலிய பல பிழைகள் நேர்ந்துவிட்டன காரணம் யாதென்பதை ஆராய்வதிற் பயனில்லை பிழைதிருத்தப் பகுதியைப் பார்த்து முதலிற் பிழையைத் திருத்திக்கொண்டு படிக்குமாறு படிக்கும் அன்பர்களை வேண்டிக்கொள்கின்றேன்.

இந்த நூலைத் தங்கள் சொந்தச் செலவில் வெளியிட்ட அரியலூர் மணிவாசக மன்றத்தாரைப் பற்றிச்

சில கூறக் கருதுகின்றேன். அம் மன்றச் செயலாளர் இருவர். ஒருவர், மு. பாலசுப்பிரமணியம்; மற்றொருவர் க. குமரவேல். இவ்விருவரும் தங்கள் உள்ளம்போற் பெயரும் ஒன்றாகவே இருக்கவேண்டுமென்று கருதி 'முருகவேல்' என்ற பெயரை வைத்துக்கொண்டார்கள். என் அருமை மாணவர்கள் சுருங்கக் கூறின் பழைய காலத்துக் குருகுல மாணவர்கள்போல் நற்பண்பே வடிவமாக உள்ளவர்கள். ஆனால் அவர்கட்கு ஆசிரியனாக இருக்கும் தகுதி எனக்கில்லை என்பதை யானும் என் உயிர்க்குயிரா யுள்ள இறைவனும் அறிவோம். ஆனால் என்னைப்பற்றி அவர்கள் கொண்டிருக்கும் கருத்தோ, நினைத்தாற்கூட எனக்கு வெட்கத்தைத்தருவது. அவர்கள் பாவனை முற்றி, அப்பாவகப் பயனாகத் திருவருள் என்னை அத்தகுதி யுடையனாக்கும் என்று நம்புகிறேன்

அவர்கள் என்னோடு நெருங்கிப் பழகியவர்களாத லால், எக்காரணம் பற்றியும், யாரையும், எதையும் யாசிக் காத என் கொள்கையையும் நன்றாக அறிவார்கள்.

எனவே ஒருமுறைக்குப் பன்முறை என்னை வற் புறுத்தி, யான் எழுதிவைத்திருந்த கையெழுத்துப் பிரதியை வாங்கி நூலாக வெளியிட்ட அவர்கட்கு இறைவனது பூரண அருளால் எல்லா நலங்களையும் அருளுமாறு எனது ஆன்ம நாயகனும், எல்லாம் வல்லவனுமாகிய தில்லைக்கூத்தன் திருவடி மலர்களை வேண்டிச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருச்சிராப்பள்ளி<br>19—1?—56

அ. மு. சரவணன்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எழுதரு மறைக டேரு
விறைவனை யெல்லிற் கங்குற்

பொழுதறு காலத் தென்றும்
பூசனை விடாது செய்து

தொழுதகை தலைமே லேறத்
துளும்புகண் ணீருண் மூழ்கி

அழுதடி யடைந்த வன்ப
னடியவர்க் கடிமை செய்வாம்

[திருவிளையாடற்புராணம்]

# அழுதடியடைந்த அன்பர்

உ

திருச்சிற்றம்பலம்.

புழுவினுற் பொதிந்திடு குரம்பையிற் பொய்தனை யொழிவித்திடும்
எழில்கொள் சோதியெம் மீசனெம்பிரா னென்னுடையப்பனென் றென்று
தொழுதகையினராகித் தூய் மலர்க் கண்கள் நீர்மல்குந் தொண்டர்க்கு
வழுவிலா மலர்ச் சேவடிக் கணஞ்சென்னி மன்னி மலருமே''

(திருவாசகம் சென்னிப்பத்து)

"அழுதடியடைந்த அன்பர்" என்பார் யார்? இத் தொடராற் குறிக்கப்படும் பெரியார் யாவரென முன்னர் அறிந்து கோடல் வேண்டும். இன்றேல் இது எந்தப் பெரியாரைக் குறித்து, எந்தப் புலவர் பெருமானுல் எந்த நூலிற் கூறப்படுகின்றதோ அதனை அறிந்தார் சிலரொழிய அறியாதார்க்கு "இவர் யாவராயிருத்தல் கூடும்" என ஒரு ஐயுறவு தோன்றுமன்றே! அஃது இத்தொடரைத் தொகுத்து வகுத்துச் செய்திருக்கும் ஆராய்ச்சியுரையிற் கூர்ந்து செல்லும் அவருடைய அறிவினை இடையிடையே சென்று தடுக்குமாதலின் அனைவரும் அறிந்த விளக்கமான பெயரால் அப்பெரியாரை முன்னர் உணர்ந்துகொண்டு மேலே செல்லுதல் பொருந்துவதொன்ருகும்.

"அழுதடியடைந்த அன்பர்" என்பார் பரந்த இந்நிலவுலகின்கண் ஒவ்வொரு காலத்தில் அஃகி அகன்ற

அறிவினையுடைய பெருமக்கள் பலரால் ஆக்கப்பட்டு ஒன்றோடொன்று கருத்து ஒவ்வாது மாறுபட்டனவாய்ப் பரந்து விரிந்து கிடக்கும் பலவேறு சமயங்களையும் தன் உறுப்புக்களாகக்கொண்டு ஒளிர்வதும்; இற்றை நாளிற் றோன்றுநின்ற சமயங்களையும் அங்ஙனமே கொள்ளா நிற்பதும்; மேல் வருஞ் சமயங்களையும் ஏற்றுக்கொள்ள இடந்தந்து திகழ்வதும்; அன்பும் அருளுமாகிய அடிப்படையால் ஆக்கப்பட்டதுமாகிய பொதுக் கொள்கையாம் சைவ சமயமும், அதன் சாதனங்களும் இன்றும் நாளையும் நின்று நிலவுமாறு இறைவன் திருவருளாற் றோன்றி அருளிய சமய குரவராம் பெருமக்கள் நால்வருள் ஒருவரும்; பெயரளவினுலே தனது சிறப்பினைத் தெரிவிக்கும் உண்மை நெறியென்னும் சன்மார்க்கத்தில் நடந்து நமக்குக் காட்டியருளியவரும்;

> "*இருந்துறு வேதச் சிரப்பொருள் முழுதும்*
> *குருந்துறு நீழலிற் கொள்ளை கொண்டவரும்*"

அங்ஙனங்கொள்ளை கொண்ட பொருளைத் தாமே நுகரும் உலோபிகள் சிலர் போலாது "நான் பெற்ற இன்பம் பெறுக விவ்வையகம்" என்னும் பெரியாரியல்புப்படி "முழுதுலகுந்தருவான் கொடையே **சென்று** முந்துமினே" எனவும், "தன் அடியவர்க்கு மூல பண்டாரம் வழங்குகின்றான் **வந்து** முந்துமினே" எனவும் முறையே தம்மோடுடன் உள்ளவர்களையும் பின்னுள்ளவர்களையும் செலுத்தி நுகர்வித்தவரும்; இன்னும் தமக்குப் பிற்காலத்தவராகிய நம்மனோரும் அதனை அடைந்துய்யத் திருவுள்ளங் கொண்டு, பல பதிகங்களையோ அன்றி ஒரு பதிகத்தையோ பல திருப்பாட்டுக்களையோ அன்றி ஒரு திருப்பாட்டினையோ பல தொடர்களையோ அல்லது ஒரு தொடரையோ, பல மொழிகளையோ அல்லது ஒரு மொழியையோ அன்புடன் ஓதினார்களானால் அவர்கள் ஊனை உருக்கி உணர்வைப்

பெருக்கி மனத்தைக்கரைத்து மலத்தைக் கெடுத்துத் தேனும் பாலுந் தீங்கன்னலுமமுதுமாய்த் தித்தித்து என் பினை உருக்கி அன்பராக்கவல்ல கருவாசம் போக்கும் **திருவாசகமென்னும்** ஒப்புயர்வற்ற திப்பிய தேனைத் தமது மலர் வாயினின்றும் வழியச்செய்தவருமாகிய மாணிக்கவாசகராவார்

எனவே அழுதடி யடைந்த அன்பர் என்பவர் மாணிக்கவாசகர் என்பது பெற்றும் பெறவே, முன்; ஐயுற்றுர் சிலர் பின்னும் மற்ருெரு ஐயத்திற்கு ஆளாவர் அது "நமது அடிகள் ஏதமற்ற வாதவூரின்கண் போத வடிவினராய்த் தோன்றிய" ஞான்று அவரை அரிய புதல் வராகப் பெறுதற்கு அளவிறந்த தவமாற்றிய அன்னையும் அத்தனும் **திருவாதவூரர்** என்னும் பிள்ளைத் திருநாமம் இட்டதாகக் கேட்டோம். திருவாதவூரர் இளம் பருவத் திலேயே கலைகள் அனைத்திலும் வல்லுநராய்ச் சிறந்து விளங்குதலை அறிஞர் வாயிலாக அறிந்த பாண்டி மன்னன் அவரைத் தன்னிடம் வரவழைத்து அவர் கல்வி, அறிவு ஒழுக்க முதலியவற்றைக்கண்டு வியந்து காவற்றேரை நடாத்தும் நமக்கு அறிவொழுக்கஞ்சான்ற இப்பெரியாரைத் துணைக்கோடல் அரியவற்றுளெல்லாம் அரிதாம் இன்றியமை யாப்பெரும் பேறன்ருே? "தம்மிற் பெரியார் தமராவொழுகு தல், வன்மையுளெல்லாந்தலை" அல்லவா? நமது பாரம் அமைச்சரைக் கண்ணுகக்கொண்டு நடத்தப்பெறுவதன்ருே? அவ்வமைச்சர் தாமும் அங்ஙனம் "அறனறிந்து மூத்த அறிவுடைய" ராய்க் கிடைப்பின் அவர் நட்பைப் பேணுது விடுதல் "பல்லோர் பகைகொளலிற் பத்தடுத்த தீமை" யுடையதன்ருே? எனக்கருதி அவர் நட்பின் பெருமையை உணர்ந்து அதனைக் கொள்ளும் திறனறிந்து, அவர் உவப்பனவாய பலவரிசைகளை நல்கித் தனக்கு முதலமைச்

சராக அமைத்துக்கொண்ட காலத்தில் **தென்னவன்பிரம ராயர்** என்னும் பெயர் அளித்ததாகவும் அறிந்தோம்.

பின் தென்னவன் பிரமராயர் அரசனுக்குக் கண்ணும் கவசமும் போலிருந்து காவற்றேரை நடாத்து விக்குங் காலத்து, இளமையிலேயே கற்கவேண்டிய நூல் களைக் கற்று அதற்குத்தக ஒழுகியதன்பயனுக நித்த வநித்த வேறுபாட்டுணர்வுடையவராய்த் துன்பப் பிறவியில் உவர்ப்பும் இன்பவீட்டில் விருப்பும் ஓங்க, அவற்றை முறையே போக்கவும் ஆக்கவும் நல்ல நெறியினைத் தம் நூலுணர்வாலும், நுட்பவுணர்வாலும் ஆய்ந்தாய்ந்து. வல்லார் பலரிடம் கேட்டுக் கேட்டும் அவைபனைத்தும் நீர்வேட்கை யுற்ருனெருவன் உவரி நீரை உண்டா லொப்ப மேலு மேலும் ஐயத்தை விளக்கக் "கற்ருரை யான் வேண்டேன், கற்பனவு மினியமையும்" என்ற கருத்துடையராய்,

***"காவிலாத பேரன்பினுக் கெளிவருங் கருணைக்***
***குரவனொரு வன்றியிக் கொடிய வெம்பாசம்***
***புரையில் கேள்வியாற் கழிப்பது புணையினுலன்றி***
***உரவு நீர்க்கடல் காங்கொடு நீந்துவ தொக்கும்"***

ஆதலின் "நாதனுகிய தன்னையுமென்னையும் நல்கும் போதனுகிய குருபரன் வருவதெப்போது" என அகவினை ஆசிரியனை நாடுவதிலும், புறவினை மன்னன் கோல் கோணுது நடத்துவதிலும் வைத்து ஒழுகுங் காலத்தில் "வேண்டுவோர் வேண்டுவதே ஈவான்" அருளால் ஒரு நாள் குதிரைப் பாதுகாவலாளர் சிலர் மன்னன் அவை யினை யடைந்து வணங்கி 'அரசர் பெரும! நமது மந்துரையிலுள்ள குதிரைகளுக்கு நேர்ந்த ஒரு நோயினுல் இறந்துபட்டன பல; எஞ்சி நின்றன சிலவே; அவையும் பெரிதும் மூப்புடையவும் எய்ப்புடையவுமாயுள்ளன.

ஆதலின் நமது அரசியல் முறைக்கு வேண்டுங் குதிரைகள் எவ்வளவோ அத்துணையும் இன்றே வேண்டப் பெறுவன என்று கூற அதனைக் கேட்ட அரசர் பெருமான் அண்மை யிலிருந்த அமைச்சர் பெருமானை நோக்கி "வாதவூர் வள்ளால்! நீவிர் இப்பொழுதே நமது பொருளறையினைத் திறந்து வேண்டு பொருள்களை எடுத்துச்சென்று நமது ஆட்சிக்கு வேண்டும் குதிரைகள் எவ்வளவோ "அவ்வள வையும் வாங்கிக்கொண்டு வருவீராக" என்று கூற அதற்குடன்பட்ட அடிகள் அவ்வாறே வேண்டிய பொருள் களை யெடுத்து யானைகள் மீதும் ஒட்டகங்கள் மீதும் ஏற்றி ஏவலாளருடன் முன்னே அனுப்பி, தாம் ஆல வாயண்ணலையும் அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி விடை பெற்றுக்கொண்டு திருப்பெருந் துறையை நோக்கிச் செல்லுங்கால் அவ்வெல்லையானது 'அடுத்திட அடுத்திட' அகத்துவகை வெள்ளமடுத்திட, முகிழ்த்தகைம் மலர்க் கமலம் உச்சி தொடுத்திட, விழிப்புனல் துளித்திட வினைக்கே விடுத்திடு மனத்தருள் விளைந்திட நடந்து, ஓ! ஈதென்ன வியப்பு! என்னுட்பல இன்பங்கள் நிகழ்கின்றன; என்னைப் பிணித்திருந்த கட்டு ஒன்று நீங்கினது போலுந் தோன்று கின்றது; என்தலையில் ஏற்றியிருந்த சுமை ஒன்று இறங் கிறற்போலுங் காண்கின்றேன்; "நெருப்பிலிடுவெண்ணெ யென நெஞ்சுருக என்னை உருக்கு"கின்றது; இவற்றால் "எனை ஒளித்தமல ஆற்றல் கருக்குமவனுகி எனை ஆள்கருணை வள்ளல் இருக்குமிடனே இது"வென எண்ணி நகரிற் புகுந்து நீராடித் திருக்கோயிலுட்புக்கு வலமாக வருகின்றுர்.

வரும்போழுது ஆங்குள்ள குருந்த மரத்தினடியில் தம்மை ஆட்கொள்ளும் பொருட்டு ஓர் அந்தணக் குலக் குரவனுகி வேதநூல் ஒருமருங்கின் மிளிரவும், சைவப் போதநூல் ஒருபுடையிற்றிகழவும், கீதநூல் ஒரு சிறை

யினிற் கிளரவும் சமய பேதநூல் ஒரு பக்கலில் வாய் விட்டுப் பிறங்கவும், மற்றொருபுறத்தில் 'சரியையாதி நாற்பாதமுந்தலைதெரிந்துணர்ந்த பெரிய மாணவர் கழகம் வினவிடை பேச'வும், பிறிதொரு பக்கலில் சரிதை வல்ல மெய்த்தொண்டரும் சம்புவுக்கினிய கிரியை செய்யு நன்மைமந்தரும் கிளர் சிவயோகந், தெரியுஞ் சாதகக் கேளிருந் தேசிகத் தன்மைபுரியும் போதகச் செல்வரும் அளப்பிலர் பொலிய'வும், வேறொரு மருங்கில் பாசங் கழித்த கண்களால் அரனுருக்கண்டு கொண்டுலகில் விழித்த கண்குருடாகிய வீரர்பலர்' ஒழித்த நோன்பினராய் ஆடுகின்றவராய்ப் பாடுகின்றவராய் உலகம் பழித்த செய்கையராய் அழுதலையுடையராய் நகையினையுடைய ராய்த் திரியவும், பிறிதோரிடத்திற் கோவண உடையும் கைப்பலி உண்டியும் அடியார் உறவும் கலன் கண்டியும் பார்படுக்கையுமாகக் கொணடு பகல், இரா, முதல், ஈறு, இடையில்லா விடத்து உறங்கும் வாழ்க்கையை மேற் கொண்ட விஞ்ஞையர் பலர் "கரவிலுள்ளமாம் விசும் பிடைக்காசற விளங்கும், பரசிலாச் சுடர்க்குதய மீறின் மையாற்பகலும், இரவும் நேர்படக் கண்டிலரியன்று செய் நித்த, விரதமாதி நோன்பிழந்து உறை"யவும் இருத்தலைக் கண்டனர்.

காண்டலும் அவ்வாசிரியன் அருட்குறிப்பு உள்ளத் தின்கண் உணர்த்த "மன்றுளாடிய ஆனந்தவடிவமும் வடவால், ஒன்றி நால்வருக்கசைவற உணர்த்தியவுருவும், இன்று நாயினேற் கெளிவந்த இவ்வுருவமே" என்று உணர்ந்து முன் பணிந்து அஞ்சலி முடிமேல் அணிந்து என்புநெக்கிட உருகித் துன்ப வெம்பவவலை அறுத்திட வலையிற்பட்டனர்; ஆண்டவனுகிய அவ்வருட்குரவன் அடிகளின் உடல், பொருள், உயிர் மூன்றையும் நீருடன் வாங்கிக்கொண்டு அருட் கண்ணினுல் மலத்தைப்

போக்கித் திருவடியை முடியிற் சூட்டிச் செங்கரத்தைச் சென்னியில் வைத்துச் சூக்குமமாகிய திருவைந்தெழுத்தை உபதேசித்துப் "பார்த்த பார்வையால், இரும்புண்ட நீரெனப் பருகும் அந்நீர்த்தன்றன்னையுங் குருமொழி செய்ததுந் தம்மைப், போர்த்த பாசமுந் தம்மையுமறந்து மெய்ப் போத, மூர்த்தியாயொன்றும் அறிந்தில" ராகிய வாதவூர் முனிவர் நாவின்கண் ஞான வாணிவந்து தங்க, அவ் வருட்குரவன் அளித்த இன்பமானது 'தேனும் பாலும் திங்கள்நலுமமுதுமாய்த் தித்தித்து ஊனையும் என்பினையும் உருக்க, உள்ளொளியுணர்ந்து தொழுதகையினராய்த் துளங்கிய முடியினராய்த் **துளும்ப அழுத கண்ணின ராய்ப்** பொடிப்புறு மியாக்கையராய் நாக்குத் தழுதழுத்த அன்புரையினராய்த்தமை இழந்தவராய் அழல்வாய் இழுதை யன்ன மெய்யினராய்' நின்று இன்பமாகிய ஆருனது உள்ளமாகிய ஏரியின்கண் நிறைந்து புறத்திற் கசிந்தாற் போன்று துதிப்பாராயினர்: அப்பொழுது,

> ***"பழுதி லாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு***
> ***முழுது மாகிய வடத்தினுன் முறைதொடுத் தலங்கல்***
> ***அழுது சாத்து மெய்யன்பருக் ககமகிழ் தையர்***
> ***வழுவி லாதபேர் மாணிக்க வாசக னென்ரூர்"***

என்று அவர் வரலாற்று மூலமாக அறிந்தோம்.

இன்னும் அவர் ஆண்டவனுலே ஆட்கொள்ளப் பட்டதனுலும், திருவாசகச் செந்தேனை ஊட்டி நம்மனோரை ஆட்கொண்டதனுலும் **ஆளுடைய அடிகள்** என்று பெரியார் கூறக் கேட்டோம். இங்ஙனம் திருவாதவூரடி களென்றும் தென்னவன் பிரமராயரென்றும், மாணிக்க வாசகரென்றும், ஆளுடைய அடிகளென்றும் அடிகளின் பெயர்களைக் கேட்டோமேயன்றி அழுதடி யடைந்த அன்பர் என ஒருபெயர் கேட்டோமில்லையே? இப்பெயரிட்டார் யாராயிருத்தல் கூடும்?

இப் பெயர் கூறியவர் யார்? என்பதை ஆராய்வோம். ஆண்டவன் ஆலவாயின்கண் அடியார்களுக்கு அருளும் பொருட்டு அருட்டிருமேனிகொண்டு ஆடியருளிய அறுபத்து நான்கு பெருவிளையாடல்களையுந் திருவிளையாடல் என்னும் பெரிய நூலாகப் பத்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய பரஞ்சோதி முனிவரென்பார் அந்நூலின் பாயிரத்துள் சமயகுரவர் நால்வருக்குந்துதி கூறுமுறையில்

*"எழுதரு மறைகள் தேறா இறைவனை எல்லிற் கங்குற்*
*பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து*
*தொழுதகை தலைமேலேறத் துளும்புகண் ணீருண்மூழ்கி*
*அழுதடி யடைந்த வன்பனடியவர்க் கடிமை செய்வாம்"*

என மணிவாசகரைத் துதிப்பாராயினர் இனி, இவர் ஆளுடைய பிள்ளையாரை வழுத்து முகத்தால்,

*"கடியவிழ் கடுக்கை வேணித் தாதைப்போற் கனற்கண் மீனக்*
*கொடியனை வேவ நோக்கிக் குறையிரந் தனையான் கற்பிற்*
*பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த*
*முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்"*

என அவர் வரலாற்றிற் சிறந்ததோரு பகுதியாகிய பாண்டியன்மீது வெப்புநோயை விடுத்துப்பின் நீக்கியருளிய செய்தியையும், ஆளுடைய அரசுகளைப்போற்று முகத்தால்

*"அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா*
*மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல*
*நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு*
*பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்".*

என அவர் வரலாற்றிற் சிறந்ததோரு பகுதியாகிய கல்லைப் புணையாகக் கொண்டு கடலைக் கடந்து கரையேறிய செய்தியையும், ஆளுடைய நம்பிகளைத் துதிக்கு முகத்தால்

*"அரவக லல்கு லார்பா லாசைசீத் தவர்க்கே வீடு*
*தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்*
*பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்*
*இரவினிற் றூது கொண்டோ வினையடி முடிமேல்*
*வைப்பாம்"*

என அவர் வரலாற்றிற் சிறந்ததோரு பகுதியாகிய பரவையார் மனைக்குப் பரமனைத் தூதனுப்பிய செய்தி யையுங்குறித்து ஆளுடைய அடிகளைக் கூறுங்கால் அவர் வரலாற்றிற் காணப்படும் சிறந்த பகுதிகளில் ஒன்றை யேனுங் கூருமல் மற்றும், வேம்பத்தூர் நம்பியும் கடவுண் மாமுனிவரும் முறையே தாமியற்றிய திருவிளையாடலிலும் திருவாதவூரடிகள் புராணத்தினும் கூருததாகிய 'இறைவனை இடையருது வழிபட்டு **அழுது அவனடியடைந்தார்**' என்னுஞ் செய்திபைத்தான் படைத்துக் கோண்டு மேற் காட்டிய "எழுதருமறைகள்" என்னும் செய்யுளாற் கூறி இருப்பதைக் கூர்ந்து நோக்குங்கால் இது நுணுகி ஆராய்வதற்குரிய தோன்றேன்பது புலனகும்.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் அடிகளோடு தோடர்புடைய நான்கு படலங் களிலும் பிறவிடங்களிலும் திருவாசகக் கருத்துக்கள் பலவும் அடிகள் பலவும் தோடர்கள் பலவும் காணப் படுகின்றன, இதனல் இவர் அடிகள் வரலாற்றைக் கூறிய ஏனைய இருவரினும் திருவாசகமேன்னுந் தேன் கடலில் நன்கு திளைத்தவர் எனத் தேரிகின்றது.

இனி அடிகள் வரலாற்றைக் கூறுமுறையில் மற்றைய இருவரோடுஞ் சிற்சில பகுதிகளில் முரண் படுகின்றனரே எனின், அங்ஙனமே அவ்விருவரும் பல விடங்களில் ஒருவரின் ஒருவர் மாறுபடுகின்றனர். அடிகள் வரலாறு இம் மூவர்களாலும் பெரும்பாலும் திரு

வாசகத்திற் காணப்படும் ஆதரவுகளைக் கொண்டும் சிறு பான்மை செவிவழியாக வந்த செய்திகளைக் கொண்டும் ஆக்கப்பட்டதாகலின் இம்மூவரன் நேருதல் இயல்பே ஆனால் ஒவ்வொருவர் மாறுபாட்டிற்கும் திருவாசகத்திற் சான்றுகள் உள. அவற்றைக்கொண்டு இதுதான் எனத் துணிந்து இம்மூவரும் வரையறுத்துக் கூறினார்களில்லை· இதனை நோக்க நமது அடிகள் வரலாறு தெய்வச் **சேக்கிழார்** பெருமான் திருவாயாற் கூறப்படாதுபோனது சைவவுலகம் செய்ததவக் குறைவு போலும். இனி, இம் மூவராலும் கூறப்படாதனவும் திருவாசகச் சான்றுகள் உள்ளனவுமாய பகுதிகளும் உள. அவற்றை நுணுகி ஆராய்ந்து காண்பது எம்மனோர்க்கியலாததொன்றாயினும் என் புல்லறிவிற்குப் புலனாகியதொன்றை இங்குக் குறிப்பதற்கு முன் ஒன்று தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

இவ்வாராய்ச்சி, நமது நாட்டின்கண் தமிழ்மொழி தலைசிறந்து நின்ற ஒரு காலத்தில் அம்மொழியை ஐயந் திரிபறக்கற்று வல்ல புலவர் பெருமக்கள் தலையில் 'சிவானு பூதிப்பெருஞ்செல்வர்' என்னுஞ் சுமையை ஏற்றி அவரியற்றிய நூல்களைப் பிள்ளையார்சுழிமுதல் முற்றிற்று வரையில் வரிவரியாக எழுத்தெழுத்தாக நம்ப வேண்டு மென்னுங் கொள்கையை மேற்கொண்டு, அறிவிற்கு ஓர் எல்லை கட்டிக்கொண்டு ஆராய்ச்சி என்னுஞ்சொல்லைக் கேட்டவளவிலே தலை நடுக்கு மக்கள் சிலருக்கு கைப் பாக இருக்கும். ஆனால் இக்காலம் ஆராய்ச்சிக்கு மதிப்புத்தருகின்றது எனக்கருதி அதற்குத்தகுதி இல்லாத பலர் அத்துறையில் இறங்கி முறை தவறிச் செல்கின்றார் எனக் கூறாமலும் இருக்க இயலவில்லை. ஆராய்ச்சி வல்லு நருக்குப் பொதுவாக இருக்கவேண்டிய குணங்கள் பல. அவை இயற்கை அறிவின் கூர்மை, நன்கு கற்று வல்ல

புலமை, பன் மொழிப்பயிற்சி, நடுவுநிலைமை, நாம் ஆராய்ச்சி அறிவாற் சிறந்துள்ளேம் என்னுந் தருக்கின்மை முதலிய பலவாம். இனி, சிறப்பாக வேண்டப்பெறுவதொன்றுண்டு அது, ஒரு ஆசிரியரைப்பற்றி ஆராயப்புகுந்தால் அவரியற்றிய நூல்களை எழுத்தெண்ணிப் படித்தல். அங்ஙனம் படித்த பின்னர் மேற்கூறிய பொதுக்குணங்களுடையார் ஆராய்ச்சிக்குத் தலைப்படவேண்டும். இன்றேல் உண்மை புலனாதல் அறிதாம். அவ்வாராய்ச்சியுடையார் முடிபிலும் தவறு நேருதல் இயல்பாகலின் தாங்கண்டதே உண்மை என்றும் பிறர் அதனை முற்றும் நம்ப வேண்டுமென்றும் கொள்ளுதலுஞ் சிறப்பாகாது. அங்ஙனங் கொண்டாராயின் மேற்காட்டிய அறிவிற்கு எல்லை கட்டுங் குழுவினருக்கும் இவருக்கும் வேறுபாடில்லை. அவர் முடிபின் வழுவினால் அவர் பெருமைக்கு நேர்ந்த இழுக்கொன்றுமில்லை. இற்றை நாளில் மாணவர்கள் பலர் ஒருநூலைப் படிக்கத் தொடங்கி பாயிரத்தைப் படித்து முடிப்பதற்கு முன்னரே அவ்வாசிரியர் காலம் முதலியவற்றை ஆராயத்தலைப்பட்டு விடுகின்றனர். திருக்குறள் கற்கப்புகுந்த ஒருவர் 'கடவுள் வாழ்த்திற்கடுத்த 'வான்சிறப்பு'ப் படிக்கும் பொழுதே கற்றுவல்ல புலவர் குழுவிற் சென்று 'அசட்டுப் புலவர்களே! திருவள்ளுவர் காலத்தைக் காணமுடியாமல் விழிக்கின்றீர்களே யான் கண்டு கொண்டேன்' என்றார். புலவருள் ஒருவர் 'தம்பி! நேற்றுத்தானே என்னிடம் வந்து திருக்குறள் வாங்கிக்கொண்டு சென்றனை, இன்று எங்ஙனம் பொய்யாமொழியார் காலத்தை மெய்யாக உணர்ந்து கொண்டனை' என வினவினார். உடனே அவர் 'வான்சிறப்பில் துப்பாக்கி என்று வந்திருக்கின்றதே அது உங்கள் கண்ணுக்குப் புலப்படவில்லையா? என்று "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" என்னுங் குறளைக் கூறி ஆசிரியர் காலம் துப்பாக்கி என்னுஞ்சொல் நமது நாட்டிற்கு வந்த பின்னர் தான் என முடிவு கட்டினர்.

இவற்றை நோக்க ஆராய்ச்சி என்னுந் திருமகள் ஒருபால் மேற்காட்டிய குணங்களமைந்த நல்லாரின் தூய உள்ளமாகிய அரங்க மேடையில் நடிக்கின்ருள். மற்றொருபால் அவள் பேய் வடிவெடுத்து அக்குணங் களில்லாத புன் மக்களிடம் தலைவிரித்துத் தாண்டவ மாடுகின்ருள். எங்ஙனமாயினும் உண்மைகாணும் நோக் கத்தோடு கூடிய ஆராய்ச்சி வேண்டுமென்பது ஒருதலை ஆராய்ச்சிக்குங்கருத்துவேற்றுமைக்கும் இடந்தராத நாடு நாடன்று. இற்றை ஞான்று நம் நாட்டிலுள்ள மக்கள் ஒரு சிலரின் குறுகிய நோக்கம் பற்றி இதனைச் சிறிது விரித்து எழுத நேர்ந்தது. அறிஞர்கள் பொறுப்பாராக.

இனி மேற்குறிக்கின்றேனென்றதை ஈண்டுத்தரு கின்றேன். அடிகளின் வரலாறு பெரும்பாலும் திருவாசகத் திலுள்ள ஆதரவுகளைக்கொண்டு எழுதப்பட்டது என முன் னரே காட்டப்பட்டது. அடிகள் தம்மை இறைவன் இறைவியோடும் வந்து ஆட்கொண்டானெனத் திருவாச கத்திற் பல விடங்களில் கூறியருளுகின்ருர்; அவை,

"கூறுடைய மங்கையுந்தானும் வந்தருளி"
(கீர்த்தித் திருவகவல்)

"கருவா யுலகினுக் கப்புறமா யிப்புறத்தே
மருவார் மலர்க்குழன் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயி லந்தணனா யாண்டு கொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ"
(திருக்கோத்தும்பி)

"நானுமென் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோ னுண்டிலனேல்
வானுந் திசைகளு மாகடலு மாயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ (ஷை)

" அரையாடு நாக மசைத்தபிரா னவனியின் மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாடவுள் ளொளியாட வொண்மாமலர்க் கண்களினீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ "

(திருத்தெள்ளேணம்.)

" கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
' புனவே யனவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே யெனைப்பிடித்தாட் கொண்டவா நயந்துநெஞ்சஞ்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ "

(ஷை)

" தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ "

(திருப்பொனனூசல்)

" வணங்கு மிப்பிறப் பிறப்பிவை நினையாது மங்கையர்
தம்மொடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல் கோமளத்
தொடுங்கூடி
அணைந்து வந்தெனை யாண்டுகொண் டருளிய வற்புத
மறியேனே "

(அற்புதப்பத்து)

"பொருந்து மிப்பிறப் பிறப்பிலை நினையாது பொய்களே
புகன்றுபோய்க்
கருங்கு ழலினர் கண்களா லேறுண்டு கலங்கியே
கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத் திருவொடு
மகலாதே
அருந்து ணைவனு யாண்டுகொண் டருளிய வற்புத
மறியேனே" (ஷ)

என்பன. இங்ஙனம் எட்டு இடங்களிற் கூறியிருத்தலை நோக்குமிடத்து, இறைவன் ஞானசிரியனாகவந்து ஆட் கொண்டபின்னர், எங்கோ அம்மையுந் தானுமாக வந்து காட்சி தந்தருளியிருக்க வேண்டுமென்று கொள்ளின் அதிலே தவறில்லை. இவ்வுண்மையை அடிகள் வரலாறு கூறிய மூன்று ஆசிரியர்களுங் கூறினாரில்லை. ஈண்டு பெரிய புராணத்திற் காணப்படும் செய்தி ஒன்று கூர்ந்து நோக்கத்தக்கது. அது,

"வடிவுடை மழுவேந்தி மதகரியுரி போர்த்துப்
பொடியணி திருமேனிப்புரி குழலுமை யோடுங்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிப் போந்த வதிசயமறியேனே"

என்று தொடங்கி ஆளுடைய நம்பிகள் அருளிச்செய்த திருக்கூடலை யாற்றூர்ப் பதிகத்தை ஆதரவாகக்கொண்டு சேக்கிழார் பெருந்தகை,

"வம்புநீ டலங்கன் மார்பின் வன்றொண்டர் வன்னி
கொன்றைத்
தும்பைவெள் ளெடம்பு திங்கடுயநீ ரணிந்த சென்னித்
தம்பிரா னமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து
கொம்பனு ராட வீடு கூடலை யாற்றூர் சார"
(ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்)

"செப்பரும் பதியிற் சேரார் திருமுது குன்றை நோக்கி
ஒப்பரும் புகழார் செல்லு மொருவழி யுமையா ளோடும்
மெய்ப்பரம் பொருளா யுள்ளார் வேதிய ராகி நின்றூர்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு" (ஷை-௱௯)

,'நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த்
தாழ்வார்
இன்றியா முதுகுன் றெய்த வழியெமக் கியம்பு மென்னக்
குன்றவில் லாளி யாருங் கூடலை யாற்றூ ரேறச்
சென்றதிவ் வழிதா னென்று செல்வழித்
துணையாய்ச் செல்ல" (ஷை-௱௨)

என வரலாறு கூறியருளினர் என்பது.

இனி மற்றொன்றும் இங்கு எடுத்துக்காட்ட விரும்பு கிறேன். நமது அடிகள் தாம் பாடியருளிய திருவாசகத் துள் தமது குறைபாடுகளைப் பலபடக்கூறியருளுவதைக் காண்கிறோம். அவற்றுள் ஒன்று தமது பொய்யைக் கடிந்துகொண்டது.

திருவாசகத்தின் முன்னுள்ள 'சிவபுராணம்' முதலிய நான்கு பகுதிகளிலும், மற்றுமுள்ள அறுநூற்று ஐம்பத் தேட்டுப்பாட்டுக்களிலும் சற்றேறக்குறைய முப்பத்துமூன்று இடங்களில், தமது பொய்யை நினைந்து வருந்துதல் காணப்படுகின்றது. அவற்றுள் தலைமைதாங்கி நிற்பது "விச்சுக் கேடுபொய்க் காகாதேன்றிங் கெனைவைத்தாய்" என்பது, இதன்பொருள்! பொய்க்கு—பொய் என்ற மரவர்க் கங்கள் உலகத்திலே தோன்றி அழியாமல் நிலை பெறு வதற்கு; விச்சுக்கேடு ஆகாது—விதை முதலில்லாமற் போதல் நன்றன்று; என்று—என்று தேவரீர் திருவுளங் கொண்டு; இங்கு – இந்நிலவுலகத்தில்; எனைவைத்தாய் – அடியேனை வைத்திருக்கின்றீர்" என்பது. இதிலிருந்து உலகத்திலே தோன்றி வளர்ந்து வருகின்ற பொய் அனைத்,

திற்கும் தாமே மூல காரணம் என அடிகள் கருதி வருந் தினுர் என்பது புலப்படுகின்றதல்லவா ? பொய் என்பது ஐந்து பெருந்தீவினைகளுள் ஒன்று என அறநூல்கள் விதித்தன. அது வீடுபேற்றுக்குத் தடையாயுள்ளதென்பதை "போவோம் காலம் வந்தது காண் **பொய்விட்டுடையான் கழல் புகவே"** என அடிகள் கூறுவதனுலும், **பொய் யுரைக்கா துன்னடிக்கே போதுகின்றேன்"** எனத் திரு நாவுக்கரசர் கூறுவதனுலும் அறியலாம்.

மேற்காட்டியவாற்ருல், அடிகள் தமது வாழ்க்கை யில் ஏதோ ஒருசிறு பொய்க்கு ஆளாகி, "தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக், கோள்வார் பழி நாணுவார்" என்ற திருக்குறளின்படி, அச்சிறு பொய்யை மலையளவாக்கருதியே அவ்வாறு வருந்தியிருக்க வேண்டு மென்று கருதினுல் அது மிகையாகாது.

இனி, அப்பொய் யாதாயிருக்கலாமெனச் சிந்திப் போம். அடிகள், குருவாக வந்து இறைவன் ஆட்கொண்டு மறைந்தருளியபின், தம்மை மறந்து குதிரை வாங்கக் கொண்டுபோன பொருள் முழுவதையும் திருக்கோயிலின் பொருட்டுச் செலவு செய்ததையறிந்த பாண்டியன் கடுமை யாக ஓர் ஓலை எழுதி அனுப்ப, அதனைப்பார்த்து நெடு நேரம் சிந்தித்து, தம்நினைவுவர, தாம் பொருளைச் செலவு செய்தது தவறு என்று கருதி, (இதன் விரிவு பின்னர் அறியப் படும்) இறைவன், 'தம்மைக் கைவ்டமாட்டான் என்ற நம்பிக்கையால், மன்னனிடஞ் சென்று, குதிரைகள் வாங்கி விட்டேன்; பின்னர்வரும்' என்று சொல்லியிருக்க வேண்டும் அவர் குறித்த காலத்திலே குதிரைகள் வாராமையால் அரசனுல் ஒறுக்கப்படுகின்ருர். எனவே இந்தப்பொய்யை நினைந்துதான் அடிகள் அவ்வாறு வருந்தியிருக்கவேண்டும். இதுவும் அந்த மூன்று ஆசிரியர்களாலும் கூறப்படவில்லை கூறுதது மட்டுமல்ல; இறைவன் அடிகளாருக்கு அசரிரி

யாக "நீ பாண்டியனிடம் குதிரைகள் வாங்கிவிட்டேன்; இன்ன காலத்தில் வரும், என்று சொல்லிவிடு; நாம் குதிரைகள் கொண்டு வருகிறோம்" என்று சொன்னார் எனக் கூறுகிறார்கள். அங்ஙனமாயின் குறித்த காலத்திற் குதிரைகள் வராவிடில் அக்குற்றத்திற்குப் பொருப்பாளி இறைவனேயன்றி, அடிகளல்ல என்பது சிறிது சிந்திப்பவர்க்கும் புலனாகாமற் போகாது. எனவே இச்செய்தியும் அந்த ஆசிரியர்களாற் கூறப்படாதது என்க.

இனி இம்மூன்று ஆசிரியர்களுள் ஒவ்வொருவரும் கூறியிருக்கும் அடிகளின் வரலாற்று அமைப்பில் ஆராய்ச்சியாளர்க்குப் பிழையாகத் தோன்றும் ஒவ்வொன்றை இங்குக் காட்டுகின்றேன்.

மணிவாசகப் பெருமானார் பாண்டிமன்னன் கட்டளைப்படியே அவன் பண்டாரத்தினைத் திறந்து வேண்டும் பொருளை எடுத்து ஒட்டகத்தில் ஏற்றி முன்னே அனுப்பி விட்டுத் தாம் திருக்கோயிலுட் சென்று ஆலவாயடிகளை வணங்கி நின்று,

*"ஒன்று வேண்டுமிப் பொருளெலா முனக்கு மைம்பொறியும்*
*வென்று வேண்டுநின் னன்பர்க்கு மாக்குக வெள்ளி*
*மன்று வேண்டிநின் றாடிய வள்ளலென் குறையீ(து)*
*என்று வேண்டிநின் றேத்துவார்"*

**(திருவிளையாடல், வாதவூரடிகளுக்குபதேசித்த படலம்)**

எனப் பரஞ்சோதி முனிவர் கூறுகின்றார். அடிகளின் ஒழுக்கத்திற்கு இது பொருந்துமா? என அறிஞர் ஆராய்வாராக. பின் அப்பொருளை அங்ஙனஞ் செலவழித்தது பொருந்துமோ எனின், பேய்க்கோட்பட்டார் செயலனைத்தும் பேய்ச்செயலே ஆதல்போல, திருவருளால் விழுங்கப்பட்ட அடிகளின் செயலும் அத்திருவருளின் செயலேயாகுமென்க. இங்ஙனம் அவர் அருட்குறவன் பார்த்த பார்வையாற் றம்மை முற்றும் மறந்திருந்தன ரென்பதும். பாண்டியன்

திருமுகம் வந்த பின்னரே" தந்நினைவு வந்து தாம் செய்த செயலுக்கு வருந்தினரென்பதுமாகிய உண்மையை,

"இத்திரு முகத்தை யாங்க ணெய்திய தூதர் காட்டப்
பத்திசெய் தடைவின் வாங்கிப் பாசுரங் காணு முன்னம்
உத்தம மன்னன் சித்த முணர்ந்தனர் கெடி துயிர்த்தார்
புத்தியு விளைத்தார் சாலக் கலங்கினர் புலம்பி னூரால்"
(ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல் ௬௨)

"தென்னவ னமைச்ச னேயா னென்னகா ரியம்செய் தேன்மேல்
என்னதாய் விளையுங் கெட்டே னிவுளிகொள் வதற்கேவந்தேன்
பொன்னையே யழித்தே னந்தோ புகலவோர் மாற்றமுண்டோ
மன்னவற் பிழைத்த லாகா மற்றினி யாவ தென்கொல்"
(ஷை ௬௩)

என்னும் வேப்பத்தூரார் திருவிளையாடற் செய்யுட்களால் அறிக.

இனி, ஆளுடைய அடிகள் தம்மை ஆட்கொண்ட அருட்குரவன் 'மாணிக்கவாசக நில்' எனக் கூறி மறைந்த பின்னர் கண்களினின்றும் அருவி பொழிய அழுது விம்மி அரற்றித் திருவாசகம் ஓதத் தொடங்கினரென்றும், அப்பொழுது பாடிய திருப்பதிகங்கள்,

"மாறிநின் றென்னை யென்னு மாறிலொண் கோயிற் பத்துத்
தேறல்வண் புணர்ச்சிப் பத்துச் செத்திலாப் பத்து மற்றும்
ஆறிய பிரார்த்த னைப்பத் தாசைப்பத் துயிரு ணிப்பத்(து)
ஏறிய புலம்பல் வாழாப் பத்தெண்ணப் பத்தெ டுத்தார்"
(ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல் ருஎ)

"அரும்பெரு நகரி னிற்போந் தவ்வயிற் றிகழ்வ கண்டே
பொருந்துவம் மனையே சுண்ணங்கோத்தும்பி புகழ்த்தெள் ளேணந்
திருந்துபூ வல்லியுந்திதோளேக்கஞ் சிறந்த பாவை
மூாண்கடி சதக மெய்யென் றேதினு ரோதப் புக்கார்"
(ஷை-ருஅ)

என்றும் வேம்பத்தூரார் கூறுகின்றுர் இவர் அப்பதிகங் களுள் திருவம்மானையில்,

*“பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்*
*கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு*
*புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானுய்”*

எனவும்,

‘இந்திரனு மாலயனும்’ என்று தொடங்குந் திருப்பாட்டில் ‘பந்தம்பரியப் பரிமேற் கொண்டான்’ எனவும் ‘பெற்றி பிறர்க்கரிய’ என்னும் முதலையுடைய திருப்பாட்டில் ‘கோற்றக் குதிரையின் மேல் வந்தருளி’ எனவும் திருப்பூவல்லியில்,

*“திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு*
*மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்*
*தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட*
*புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ”*

எனவும்,

*“மாவார வேறி மதுரைநகர் புகுந்தருளித்*
*தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்*
*கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்*
*பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ”*

எனவும் ஆளுடைய அடிகள் அருளியிருக்கின்றதனுல் இவ்விரண்டு பதிகங்களும் ஆண்டவன் அடிகளின்

பொருட்டு நரிகளைப் பரிகளாக்கிக்கொண்டு குதிரை வீரனாக வந்ததும், அடிகளும் வந்தியுமாகிய இருவர் பொருட்டும் மண்ணெடுக்குங் கூலியாளாக வந்து பாண்டியனாற் பிரம்படி பட்டு மறைந்ததுமாகிய நிகழ்ச்சிகள் நடந்த பின்னரே பாடப் பெற்றனவாதல் வேண்டுமெனக்கூர்ந்து நோக்கிலரெனக்கூறின் அது மிகையாகாதென நினைக்கிறேன். இங்கு அன்பர்கள் உள்ளத்தின்கண் ஒன்றைப் பதித்து வைத்துக்கொள்ளவேண்டுகின்றேன். அது என்னை யெனின் இங்ஙனம் ஆசிரியர்கள் பிழை பாட்டினை எடுத்துக் காட்டுதலால் அவர் புலமை, பெருமை முதலியவற்றிற்கு இழுக்கு நேர்ந்து விட்டதென்றுதல், அத்தவறுகளை எடுத்துக் காட்டுகின்றவர்கட்கு அமையாததொரு பெருமை வந்துவிட்டதென்றுதல் எண்ணுததுடன் மக்கள் எளிதிற் செய்தற்கரிய வினைகளை மேற்கொள்ளின் அதிற்பிழை நேருதல் இயல்பு என்பதாகும்.

இனி, இப்பரஞ்சோதி முனிவரும், வேம்பத்தூர் நம்பியும் மணிவாசகப் பெருமான் வரலாறு ஒன்றையே கூறும் நோக்கத்தோடு நூல் செய்யவில்லை. ஆலவாயின் கண் நிகழ்ந்த ஆண்டவ னருள்விளையாடல்களைக் கூறிய வர்கள், அடிகளின் வரலாறு அம்மதுரைப்பதியின்கண் தொடர்புள்ளவரையிற் கூறி எஞ்சிய பிற்பகுதியைச் சுருக்கமாகக்கூறி முடித்தனர். கடவுண்மா முனிவர் ஒருவரே அடிகளின் வரலாறு ஒன்றையே கூறும் கருத் தோடு 'திருவாதவூரர் புராணம்' எனப் பெயரிட்டுக் கொண்டு நூல் பாடிமுடித்தவர். இவர் 'கல்யாண ஆரவாரத்தினுல் தாலிகட்ட மறந்துவிட்டார்' (இது தவருன பழமொழி; 'தாலி காட்ட மறந்தார் என்பதுதான் தவறில் லாதது,) என்னும் பழமொழிக்கு இலக்காக 'மாணிக்க வாசகர்' என்னும் பெயரையே கூற மறந்துவிட்டனர்.

ஒரு பெரியார் வரலாறு கூறவந்த ஒரு ஆசிரியர் அவருடைய சிறந்ததோரு பெயரையே கூருது விட்டன ரென்பதை நோக்க வியவாதார் யார்? இஃது ஆராய்ச்சி வல்லுநருக்கு ஒரு பெரு விருந்தன்றோ?

இனி, இம்மூன்று ஆசிரியர்களுள் பரஞ்சோதி முனிவரென்பார் ஏனைய இருவரினும் திருவாசகத்தில் நன்கு பயின்றவர் என முன்னர்க் குறித்ததைச் சிறிது ஆராய்ந்து மேற்செல்வோம்.



## 2. திருவாசகமும், : :
## : : பரஞ்சோதி முனிவரும்.

அடிகள், இறைவன் திருவருளைப் பெறுவதற்குத் தாம் எவ்வாற்றானும் தகுதியுடையவரல்லரேன்றும், அங்ஙன மிருக்கவும் அவ்வாண்டவன் தன் பெருங்கருணையினால் அருட்குரவனாகி எளிவந்து தம்மை வலிய ஆண்டுகோண்டு ஆராவின்பம் அளித்த செயல்,

*"பெரியார்க்குச் செய்யுஞ் சிறப்பினைப் பேணிச்*
*சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு*
*பூமேல் விசை முரலு மூரா வதுவன்றே*
*நாய்மேற் றவிசிடு மாறு" (பழமொழி–எரு)*

என்றாங்கு நாய்க்குத் தவிசிட்டதை ஒக்குமெனவும் கருதி இக்கருத்தைத் தாமருளிய திருவாசகத்திற் பல விடங்களிற் கூறியருளுகின்றார். அக்கருத்தை விளக்கும் பாட்டுக்கள்,

*"கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்*
*கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்,*
*நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே*
*நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே,*
*காட்டா தனவெல்லாம் காட்டிப் பின்னுங்*
*கேளா தனவெல்லாம் கேட்பித் தென்னை,*
*மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டா*
*னெம்பெருமான் செய்திட்ட விச்சை தானே"*

(திருச்சதகம்-உ அ)

"ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை யேற்றுவித்த
என்றாதை தாதைக்கு மெம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ"

(திருக்கோத்தும்பீ—அ)

"பூமே லயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க வடியே னிறுமாக்க
நாய்மேற் றவிசிட்டு நன்றாப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

(ஷ—உய)

"நானாடி யணைவானொரு நாய்க்குத்தவி சிட்டிங்
கூனாருடல் புகுந்தானுயிர் கலந்தானுளம் பிரியான்
தேனார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை
யுறைவான்
வானோர்களு மறியாததோர் வளமீந்தன னெனக்கே"

(உயிருண்ணிப்பத்து—உ)

"கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னாயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே யடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே"

(திருவேசறவு—ரு)

"செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

(அச்சோப்பதிகம்—கூ)

